

# ஹைக்கூ தமிழில்...

முனைவர் சித்ரா
ஹாங்காங்

# ஹைகா
# தமிழில்...

முனைவர் சித்ரா
ஹாங்காங்

படங்கள்
மு. இர. அரங்கநாதன்
ஜ. முகுந்தன்



அண்ணாந்து பார்த்தால் வானம்
மனித அரக்கர்கள் வாழும் நிலம் கீழே
மரக்கிளையில் தனியனாய் நான்


கவனித்தேன் பார்த்தேன் முயல்கிறேன்
தலைகீழாய் நின்றேனும் சாதிக்க நினைப்பதை சாதிக்க
ஓடும் ஓட்டத்தில் எல்லோரும்



பறக்க விரும்புகிறேன் வானில்

மகிழ்ச்சியான கனவுகளை மட்டுமே எண்ணத்தில் கொண்டு

முடியுமா இந்த உலகில்?


ஆளாளுக்கு ஒரு பக்கம்
நோக்கும் இடமும் போகும் பாதையும் வெவ்வேறு
சமூகம் இல்லாமல் முடியுமா?


என் வீட்டில் சுகம்
அடுத்த வீட்டில் நடப்பது பற்றி அறியக்
கேட்பது அதனிலும் சுகம்


சிறகு விரிய விரிய
லேசாகும் எடை தருமே எளிதான வகையான
இலக்கை அடையும் பலத்தை

சரியாகப் பயன்படுத்தும் போதில்

வெற்றிப் படி அமையும் வாழ்வில் உயர

கதவைத் தட்டும் சந்தர்ப்பங்கள்




தேனை ருசிக்க ஓரடி
இங்கு வந்து சேர செய்த முயற்சிகள்
பொறாமை கொள்வதில் பலனில்லை


இருக்கும் திறனை வளர்த்து
மகிழ்வுடன் வெற்றிப் பாதையில் எளிதாக நடந்தால்
கவலை கொள்ள நேரமேது?



தவறென்ன வாய் திறப்பதில்

கிடைக்க வேண்டுவன கிடைக்கும் வேண்டிய பொழுதில்

சரியான முயற்சி எடுத்தால்...

தொடர்ந்த தேடுதல் எந்நாளும்

எதைத்தான் பிடிக்க ஓட்டமாய் ஓடுகிறார்களோ - இங்கே

இரை தேடும் நான்



ஊர்ந்து ஊர்ந்து சென்று

இலக்கை நான் அடைவது எப்படி எப்போது

சொல்லத்தான் முடியுமா உங்களால்


小食攤位
வாழ்வதோ பத்தே நாட்கள்
ஆடுகிறார்கள் உள்ளன்புடன் கைவீசி அனைவரையும் மகிழ்விக்க
அன்றைய பொழுதை எண்ணி...


MACAO
கண்களில் என்ன தேடுதல்
வெற்றிக் கனியைப் பறிப்பது எப்படி என்றா?
நடக்குமா இந்த வாழ்வில்?


出口 Exit
மகரந்தத் தேனின் ருசி
கொடுத்துச் சிவக்கும் மலர்கள் கொள்ளும் மகிழ்ச்சி
புரியும் அனுபவித்துப் பார்த்தால்..


வண்ண வண்ணக் குடைகள்
இறைவன் செய்த வகையான குடைகளின் சாயலில்
மனிதனின் கை வண்ணம்..


கைக்குள் அடக்க ஆசை
மலர்க் கூட்டம் மக்கள் கூட்டம் விருப்பம்
பார்ப்பதிலில்லை படம் பிடிப்பதில்...


தெரியும் நீ யாரென்று
புறத்தைக் கண்டு கொள்ளாமல் அகத்தைத் தேடி
உள்ளே செல்லச் செல்ல...


எவ்வளவு உயர்ந்து நின்றாலும்
நிலத்தில் ஒரு கால் நிச்சயம் இருப்பின்
உயர்வு பெறலாம் பாங்காக...

போகும் இடந்தான் ஏது
கூடு கட்ட இடம் தேடித் தேடியே
வரம் கேட்கத்தான் வந்தனவோ?

11 02 2013


அழகான ஓவியம் ஒன்று
பனியின் கோபத்தைக் குறைக்க வெள்ளை வெள்ளைப்
படமாக விரிந்தது இங்கு...
09 02 2013



கண்களில் தெரியும் ஒளி
வலைக்குப் பின் இருக்கும் வரை மட்டுமே
பாதுகாப்பு நம் இனத்திற்கு...

மனிதக் கற்பனைக்கேது ஈடு?
பனியும் ஒளியும் கலந்த செட்டான காட்சி
விரிந்து கிடக்குது பாரு...











துருவத்தை மத்தியில் இயற்றினான்
வடக்கும் தெற்கும் ஓரிடத்தில் காண முடிந்தது
இயற்கையின் கணக்கை மாற்றினால்...


அமைதியான மலையின் உச்சியில்
அலைபாயும் உங்கள் மனங்கள் அமைதி பெற
என்னைக் காண வரலாமே..


நிற்பதோ நிலையாக ஓரிடத்தில்
நிழற்படமாக உலகமெங்கும் பலரின் கைகளில் தவழும்போது
உயிர் பெறும் சிலைகள்...

போகப் போவது உறுதி
இதில் நீ நான் என்ற போக்குடன்
நடக்குது போட்டா போட்டி !!!



2012/11/19 12:15

